ஸ்ரீ:

माङ्गल्यस्तवः

# மாங்கள்ய ஸ்தவம்

(ஸ்ரீ விஷ்ணு விஜய ஸ்தோத்ரம், அபாமார்ஜந ஸ்தோத்ரம் ஆகியவற்றுடன்)

## மூலம் தேவநாகரியிலும் தமிழிலும்






பதிப்பகத்தார்

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**

**சென்னை-600017 :: திருச்சி-620002**

ஶ்ரீ:

माङ्गल्यस्तवः

# மாங்கள்ய ஸ்தவம்

(ஸ்ரீ விஷ்ணு தர்மோத்தரத்திலிருந்து எடுத்தது)

[ஸ்ரீ விஷ்ணு விஜய, அபாமார்ஜந ஸ்தோத்ரங்களுடன்]



பதிப்பகத்தார்:

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,**
**தியாகராயநகர், சென்னை-600 017.**

லிப்கோவின் திருச்சி விற்பனை நிலயம்:
**17/1, நந்திகோயில் தெரு, தெப்பக்குளம், திருச்சி-620 002.**

சென்னையில் லிப்கோ ஸ்டாகிஸ்டுகள்:
**எம். தாமோதரம் அண்டு கம்பெனி,**
**108, கார்ப்பொரேஷன் பழக் கடை, சென்னை-600 001.**

விலை ரூ. 1-50



முதற்பதிப்பு: 1977

ஸ்ரீ:

# க்ருதஜ்ஞதை

ஸ்ரீரங்கம் சிரோமணி ஸ்ரீ உ. வே. M. S. ராஜ **கோபாலாசார்யர் ஸ்வாமியால்** பதிப்பிக்கப் பட்ட இந்த ஸ்தோத்ரத்தை (மாங்கள்ய ஸ்தவம்) வெளியிட எமக்கு அநுமதி அளித்த 7, நாதமுனி தெரு, சென்னை-600 017, **விசிஷ்டாத்வைத பிரசாரிணி ஸபா நிர்வாகிகளுக்கு** எங்கள் க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

**21—4—1977.** **— தி லிட்டில் ப்ளவர் கம்பெனி.**

# முகவுரை

'மாங்கள்ய ஸ்தவம்' என்பது விஷ்ணு தர்மோத்தர புராணத்தில் உள்ளது. இதில் ஐம்பது ஸ்லோகங்கள் உள்ளன. உலகத்தில் கஷ்டங்கள் நேரும்போதும் ஒரு நல்ல காரியத்தை ஆரம்பிக்கும்போதும் அதை நிர்விக்னமாக நடத்திக்கொடுத்துத் தலைகட்டவும், துஸ்வப்னமோ அல்லது அமங்கலமோ நேரும் போதும் அல்லது நேருமோ என்கிற பயம் தோன்றும்போதும் அக்கஷ்டத்திலிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்ளவும் மாங்கள்ய ஸ்தவம் ஒன்றே துணை கொடுக்கும். இந்த ஸ்தோத்ரத்தில் புலஸ்த்ய முகமாக ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பரத்வமும் மஹாவிஷ்ணுவே ஜகத்காரணன் என்பதும் ஸர்வ பாபங்களையும் போக்கும் திவ்யமங்கள தேவதை என்பதும் இகத்திலும் பரத்திலும் வேண்டிய ஸகல ஸௌபாக்யங்களையும் அளிப்பவன் என்பதும் உபதேசிக்கப்படுகிறது. இந்த ஸ்தோத்ரத்தை ஜபம் செய்ய ஆரம்பித்த உடனேயே தீமைகள் 'அழிகின்றன. கிரஹங்களின் கொடிய பலன்கள் தீய்ந்து போகின்றன. நாம் செய்யும் நற்காரியங்கள் மிக உயர்ந்த பலனை அளிக்கின்றன. பொதுவாக இந்த ஸ்தோத்ர படனம் நமக்கு உயர்ந்த கவசமாக இருக்கிறது. **பெரியவர்கள் இதை ஒரு நாள் தவறுமல் காலை வேளையில் அபிகமன ஆராதனத்தில் பாராயணம் செய்து கொண்டே இருந்திருக்கிறர்கள்.**

**சமீபகாலத்தில் இந்த திவ்யமங்கள ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்ததால் சிலருக்கு சில அதிசயிக்கத்தக்க நற்பலன்கள் கிடைத்துள்ளன. கல்யாணம், உபநயனம் போன்ற மங்கள காரியங்கள் நிற்கவேண்டிய அவசியம் வந்தும், தொடர்ந்து இதைப் பாராயணம் செய்ததால் மங்களகரமாக நிறைவேறின.** ஒரு கல்லூரியின் முதல்வர் ஒரு பெரிய மனக்கஷ்டத்திலிருந்து விடுபட்டார். இன்னும் பற்பல நற்பலன்கள் பல பேருக்குக் கிடைத்துள்ளன.

இந்த ஸ்தோத்ரத்தை தினமும் விளக்கேற்றி வைத்து ஸ்த்ரீகளும் பாராயணம் செய்யலாம். அவர்களது க்ருஹங்களில் மங்களம் பொங்கும் என்பதில் ஐயமில்லை. பெண்கள் இதைப் பாராயணம் செய்வதால் மாங்கல்ய பலம் உண்டு. குழந்தைகளும் க்ஷேமமடைவார்கள். அவர்கள் துக்கப்படும் ஸம்பவம் எதுவும் நேராது.

அடுத்தபடியாக 'ஸ்ரீ விஷ்ணு விஜய ஸ்தோத்ரம்' என்பது பத்ம புராணத்தில் உள்ளது. இந்த ஸ்தோத்ரத்திலேயும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பரத்வம் பரக்கப் பேசப்பட்டிருக்கிறது. இதைப் படிப்பதால் நடக்கமுடியாத காரியங்கள் நடக்கும். எதிலும் வெற்றி கிட்டும். **அச்வமேத யாகங்களைப் போன்ற பெரிய யாகங்களைச் செய்த பலன் கிட்டும்.** இதையும் மாங்கல்ய ஸ்தவத்தையும் சேர்த்தே பாராயணம் செய்வது நலம்.

மற்றும், விஷ்ணு தர்மோத்தரத்தில் உள்ள 'அபாமார்ஜந ஸ்தோத்ரம்' என்ற அபூர்வமான ஸ்தோத்ரமும் இங்கு சேர்க்கப்பட்டுள்ளது. இது ஏவல், சூன்யம், வியாதி, க்ரஹபீடை, விஷபீடை முதலிய எல்லாத் துயர்களையும் நீக்கவல்லது. வராஹ, நரஸிம்ம, வாமன, விஷ்ணு, ஸுதர்சன மூர்த்திகளைப் பற்றிய இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்தால் எல்லாக் கஷ்டங்களும் நீங்கி ஸகல க்ஷேமங்களும் உண்டாகும்.

**(Mrs.) VISHNUPRIYA CHARIAR,**
"SRI PADHUKA RAJYAM",
19, R. K. Nagar,
PONDICHERRY-605003.

**|| ஸர்வே ஜநா: ஸுகிநோ பவந்து ||**

ஸ்ரீ:

# ॥ माङ्गल्यस्तवः ॥

( विष्णुधर्मोत्तरान्तर्गतः )

ஸ்ரீ விஷ்ணு தர்மோத்தரத்தில் உள்ள

# மாங்கள்ய ஸ்தவம்

❖❖❖❖❖❖❖❖❖

दाल्भ्यः—

कार्यारम्भेषु सर्वेषु दुःस्वप्नेषु च सत्तम ।
अमङ्गल्येषु दृष्टेषु यज्जप्तव्यं तदुच्यताम् ॥
येनारम्भाश्च सिद्ध्यन्ति दुःस्वप्नश्चोपशान्तये ।
अमङ्गलानां दृष्टानां परिहारश्च जायते ॥

தால்ப்ய :—

கார்யாரம்பேஷு ஸர்வேஷு
துஃஸ்வப்நேஷு ச ஸத்தம ।
அமங்கள்யேஷு த்ருஷ்டேஷு
யஜ்ஜப்தவ்யம் தது ச்யதாம் ॥
யேநாரம்பாச்'ச ஸித்த்யந்தி
துஃஸ்வப்நச்'சோபசாந்தயே ।
அமங்களாநாம் த்ருஷ்டாநாம்
பரிஹாரச்'ச ஜாயதே ॥

---

குறிப்பு : ச' சி' என்று பக்கத்தில் குறியுடன் உள்ளவை சிவன், சனி என்ற சொற்களிலுள்ள 'ச'கரம்போல் உச்சரிக்கப் படும்.

தால்ப்யர் கூறுகிறார் : ப்ரஹ்மத்தை உணர்ந்தவருள் பெரியோரே, கார்யங்களை ஆரம்பிக்கும் போதும், துஸ்வப்நமோ அமங்களமோ நேரும்போதும் எதனை ஜபிக்க வேண்டும்? அறிவுரை எங்கட்கு வழங்கப்பட வேண்டும். துவங்கிய கார்யங்கள் இனிது நிறைவேறுவது எதனால்? கெட்ட கனவு பலனற்றுப் போவதும் எதனால்? யாம் காணும் அசுபங்களுக்குப் பரிஹாரம் உண்டாவதும் எதனால்? (1-2)

**श्रीपुलस्त्यः—**

**जनार्दनं भूतपतिं जगद्गुरुं स्मरन् मनुष्यः सततं महामुने ।**
**दुष्टान्यशेषाण्यपहन्ति साधयति अशेषकार्याणि च यान्यभीप्सति ॥**

*ஸ்ரீ புலஸ்த்ய:—*

**ஜநார்தநம் பூதபதிம் ஜகத்குரும்**
**ஸ்மரந் மநுஷ்யஸ் ஸததம் மஹாமுநே ।**
**துஷ்டாந்யசே'ஷாண்யபஹந்தி ஸாதயதி**
**அசே'ஷகார்யாணி ச யாந்யபீப்ஸதி ॥**

புலஸ்தியர் மொழிவது :- மாமுனிவரே, பிறவியை நீக்க வல்லவரும், உலகில் உள்ள பொருள் எல்லாவற்றிற்கும் சொந்தக்காரரும், உலகிலேயே மிக உயர்ந்தவருமான எம்பெருமானை தியானித்துக் கொண்டிருக்கும் மனிதன் தீயனவெல்லாம் போக்கிக் கொண்டு, தான் விரும்பும் எல்லாச்செயல்களையும் நற்பயனளிக்கும் படி ஸாதித்துக் கொள்ளுகிறான். (3)

**शृणुष्व चान्यद् गदतो ममाखिलं वदामि यत्ते द्विजवर्य मङ्गलम् ।**
**सर्वार्थसिद्धिं प्रददाति यत्सदा निहन्त्यशेषाणि च पातकानि ॥**

ச்'ருணுஷ்வ சாந்யத் கததோ மமாகிலம்
வதாமி யத்தே த்விஜவர்ய மங்களம் |
ஸர்வார்த்தஸித்திம் ப்ரததாதி யத் ஸதா
நிஹந்த்யசேஷாணி ச பாதகாநி ||

அந்தணர் பெருமானே, எது உமக்குச் சுபமோ, எது வேண்டிய பலன்யாவும் கைகூடும்படி செய்யவல்லதோ, எது தீவினையாவற்றையும் ஒழிக்கவல்லதோ அத்தகைய துதியை உமக்குக் கூறுகிறேன். அதை முழுவதும் கேட்பீராக. (4)

प्रतिष्ठितं यत्र जगच्चराचरं जगत्त्रये यो जगतश्च हेतुः ।
जगच्च पात्यत्ति च यः स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ப்ரதிஷ்டிதம் யத்ர ஜகத் சராசரம்
ஜகத்த்ரயே யோ ஜகதச்'ச ஹேதுஃ |
ஜகத் ச பாத்யத்தி ச யஸ்ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரிஃ ||

மூவுலகிலும் யார் ஜங்கமஸ்தாவர ரூபமான உலகிற்குக் காரணமானவரோ, யாரிடத்தில் இது நிலைத்துக் கீழே விழாது தாங்கப்பட்டு நிற்கிறதோ, இவ்வுலகை யார் ரக்ஷிக்கிறரோ, (ப்ரளயகாலத்தில்) யார் இதனை உணவைப்போல் தம்முள் ஒடுங்கும்படி செய்கிறரோ, ஸர்வ பாபங்களையும் போக்கும் அந்தத் திருமால் எனக்கு மங்களங்கள் பொங்கிப் பெருக அருள்வாராக. (5)

व्योमाम्बुवाय्वग्निमहीस्वरूपैः विस्तारवान् योऽणुतरोऽणुभावात् ।
अस्थूलसूक्ष्मः सततं परेश्वरो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

வ்யோமாம்பு வாய்வக்நி மஹீஸ்வரூபைஃ
விஸ்தாரவாந் யோऽணுதரோऽணுபாவாத் |
அஸ்தூல ஸூக்ஷ்மஸ் ஸததம் பரேச்'வரோ
மமாஸ்து மாங்கள்யவிவ்ருத்தயே ஹரிஃ ||

வான், வாயு, தீ, நீர், பூமி எனும் இவ்வுருவுகளால் தம்மைப் பெருக்கிக் கொண்டவரும், சிறிய பொருட்களிலும் சிறியவரும், சிறிது, பெரிதென்றளவுள்ள பொருட்களைக் காட்டிலும் முற்றிலும் வேறான தன்மையுள்ளவருமான ஹரி எக்காலத்திலும் எனக்கு மங்களங்கள் பெருக அருள்வாராக. (6)

यस्मात्परस्मात्पुरुषादनन्तात् अनादिमध्यादधिकं न किंचित् ।
स हेतुहेतुः परमेश्वरेश्वरो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

யஸ்மாத் பரஸ்மாத் புருஷா தநந்தாத்
அநாதிமத்யா ததிகம் ந கிஞ்சித் ।
ஸ ஹேது ஹேதுः பரமேச்'வரேச்'வரோ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரிः ॥

காலத்தாலும், இடத்தாலும், குணங்களாலும் அளப்பரிதானவரும், பிறப்பும் இறுதியுமற்றவரும், தம்மிலும் உயர்ந்த ஒருவரைக் கிடையாதவரும், படைப்போரையும்கூட படைப்பவராகவும், தேவர்க்கும் தேவனாகவும் உள்ள ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள்வாராக. (7)

हिरण्यगर्भाच्युतरुद्ररूपी सृजत्यशेषं परिपाति हन्ति ।
गुणाग्रणीर्यो भगवान् स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஹிரண்ய கர்ப்பாச்யுத ருத்ரரூபீ
ஸ்ருஜத்யசே'ஷம் பரிபாதி ஹந்தி ।
குணாக்ரணீர் யோ பகவாந் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரிः ॥

நான்முகனுக்கு அந்தராத்மாவாயிருந்து உலகத்தைப் படைத்தும், தானே நேரில் அச்சுதனாய்த் தோன்றி அதை ரக்ஷித்தும், ருத்ரனுக்கு ஆத்மாவாய் நின்று இதனை அழித்தும் வருகிறவரும், குணசாலிகளுள் முதல்வரும், நன்ஞானம், படைக்கப்படும் பொருளாக ஆகும் ஆற்றல், அகிலத்தையும் தாங்கும் வலிமை, இதில்

ஆயாஸமின்மை, பிறரைத் தம் இஷ்டப்படி இயங்கும்படிச் செய்ய வல்ல மிடுக்கு, ஸூர்ய வெளிச்சத்தில் விளக்குப்போல் பிற பொருளையில்லையாக்கவல்ல பேரொளி இவையாவும் உடையவரும், தோஷம் சிறிதுமில்லாதவருமான ஹரி எனக்குச் சுபங்களே பெருக அருள்பாலிப்பாராக. (8)

परः सुराणां परमोऽसुराणां परो यतीनां परमो मुनीनाम् ।
परः समस्तस्य च यः स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

பரஸ் ஸுராணும் பரமோऽஸுராணும்
பரோ யதீநாம் பரமோ முநீநாம் |
பரஸ் ஸமஸ்தஸ்ய ச யஸ் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

தேவர்க்கும், அஸுரர்க்கும், துறவிகட்கும், முனிவர்க்கும், எல்லாவற்றிற்குமே மிகமிக உயர்ந்தவரான ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருளவேண்டும். (9)

ध्यातो मुनीना-मपकल्मषैर्यो ददाति मुक्तिं परमेश्वरेश्वरः ।
मनोऽभिरामः पुरुषः स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

த்யாதோ முநீநா மபகல்மஷைர் யோ
ததாதி முக்திம் பரமேச்'வரேச்'வர: |
மநோபிராம: புருஷஸ் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

எல்லாக்காலத்திலும் தன்னையே நினைத்திருப்பவர்களின், குற்றமற்ற உள்ளங்களால் சிந்தனை செய்யப்பட்டு, அவர்க்கு முக்தியளிப்பவராயும், மனதைக் கவரும் அழகுடையவராயும் எல்லா பலனையும் தர வல்லவராயும் இருக்கும் ஹரி எனக்கு மங்களங்கள் வ்ருத்தியாக அநுக்ரஹம் செய்வாராக. (10)

सुरेन्द्र-वैवस्वत-वित्तशम्बुप-स्वरूपरूपी परिपाति यो जगत् ।
स शुद्धशुद्धः परमेश्वरेश्वरो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஸுரேந்த்ர-வைவஸ்வத-வித்தபாம்புப-
ஸ்வரூபரூபீ பரிபாதி யோ ஜகத் ।
ஸ சு'த்த சு'த்த: பரமேச்'வரேச்'வர:
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

தேவேந்த்ரன், இயமன், வருணன், குபேரன் என்பவரைத் தம் உடலாகக் கொண்டு யார் உலகைப் பரிபாலிக்கிறாரோ, தூய பொருட்கும் தூய்மையளிக்கும் அந்த ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள்வாராக. (11)

यन्नामसङ्कीर्तनतो विमुच्यते ह्यनेक-जन्मार्जित-पापसञ्चयात् ।
पापेन्धनाग्निः स सदैव निर्मलो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

யந்நாம-ஸங்கீர்த்தநதோ விமுச்யதே ஹி
அநேக-ஜந்மார்ஜித-பாபஸஞ்சயாத் ।
பாபேந்தநாக்நிஸ் ஸ ஸதைவ நிர்மலோ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

பல பல பிறவிகளில் ஈட்டிய பாபமூட்டைகள் எவருடைய திருநாமஸங்கீர்த்தநத்தால் தொலைகிறதோ, விறகை அழிக்கும் தீ போல் பாபத்தை அழிக்க வல்லவரும் மாசற்றவருமான அந்த ஹரி எனக்கு மங்களங்கள் எப்பொழுதும் பொங்கிப் பெருக அருள் செய்யவேண்டும். (12)



வராஹாவதாரம்

येनोद्धृतेयं धरणी रसातलात् अशेष-सृष्टिस्थिति-कारणादिकम् ।
बिभर्ति विश्वं जगतः स मूलं ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

யேநோத்த்ருதேயம் தரணீ ரஸாதலாத்
அசே'ஷ ஸ்ருஷ்டிஸ்திதி காரணாதிகம் |
பிபர்த்தி விச்'வம் ஜகதஸ் ஸ மூலம்
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

பாசி தூர்த்துக்கிடந்த பார்மகளைப் பாதாளத்திலிருந்து யார் தூக்கி எடுத்தாரோ, யார் மற்றெல்லாரையும் படைத்தளித்து அழிக்கவும் செய்கிறாரோ, ஜகந் மூலமான அந்த ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள்வாராக. (13)

पादेषु वेदा जठरे चराचरं रोमस्वशेषा मुनयो मुखे मखाः ।
यस्येश्वरेशस्य स सर्वदा प्रभुः ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

பாதேஷு வேதா ஜடரே சராசரம்
ரோமஸ்-வசே'ஷா முநயோ முகே மகா: |
யஸ்யேச்'வரேச'ஸ்ய ஸ ஸர்வதா ப்ரபு:
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

எந்த தேவதேவனுடைய பாதங்களில் வேதங்களும், திருவயிற்றில் அண்டசராசரம் முழுவதும், உரோமங்களில் முனிவர்களனைவரும், முகத்தில் யாகங்களும் இருக்கின்றனவோ அந்த ஆற்றல் மிக்கானான ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அநுக்ரஹம் செய்ய வேண்டும். (14)

समस्त-यज्ञाङ्गमयं वपुः प्रभोः यस्याङ्ग-मीशेश्वर-संस्तुतस्य ।
वराहरूपी भगवान् स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஸமஸ்த-யஜ்ஞாங்கமயம் வபு: ப்ரபோ:
யஸ்யாங்க-மீசே'ச்'வர-ஸம்ஸ்துதஸ்ய |
வராஹரூபீ பகவாந் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

ஸமஸ்த தேவர்களாலும் துதிக்கப்பட்ட எந்த ப்ரபுவின் திரு அவயவங்கள் யாக உபகரணங்களனைத்துமாய் ஆகின்றனவோ, அந்தக் கோலவராஹ வடிவம் கொண்ட பகவானான ஹரி எனக்கு மங்களங்கள் பல்கிப் பெருக அருளவேண்டும். (15)

विक्षोभ्य सर्वोदधि-तोय-संभवं दधार धात्रीं जगतश्च यो भुवम् ।
यज्ञेश्वरो यज्ञपुमान् स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

விக்ஷோப்ய ஸர்வோததி-தோய-ஸம்பவம்
ததார தாத்ரீம் ஜகதச்'ச யோ புவம் ।
யஜ்ஞேச்'வரோ யஜ்ஞபுமாந் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

மாகடல் நீரனைத்தையும் கலக்கி ப்ராணிகளின் இருப்பிடமான பார்மடந்தையைப் பேர்த்தெடுத்தவரும் யாகங்களால் பூஜிக்கப்படுபவரும் யஜ்ஞவராஹ மூர்த்தியுமான ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருளவேண்டும். (16)

पाताल-मूलेश्वर-भोगिसंहतौ विन्यस्य पादौ पृथिवीं च बिभ्रतः ।
यस्योपमानं न बभूव सोऽच्युतो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

பாதாள-மூலேச்'வர-போகி-ஸம்ஹதோ
விந்யஸ்ய பாதௌ ப்ருதிவீம் ச பிப்ரத: ।
யஸ்யோபமாநம் ந பபூவ ஸோச்யுதோ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

ஸமஸ்த ஜகதாதாரனான பரமனது திருப்பள்ளியான ஆதிசேஷன்மேல் திருப்பாதங்களை ஊன்றிப் பூமிதேவியைப் பேர்த்தெடுத்த எந்த பகவானுக்கு உவமையே இல்லையோ அந்த பகவான் எனக்கு மங்கள வ்ருத்தியைச் செய்வாராக. (17)

सघर्घरं यस्य च बृंहितं मुहुः सनन्दनाद्यै-र्जनलोक-संश्रितैः ।
श्रुतं जयेत्युक्तिपरैः स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஸகர்கரம் யஸ்ய ச ப்ரும்ஹிதம் முஹு:
ஸநந்தநாத்யைர் ஜநலோக-ஸம்ச்'ரிதை: ।
ச்'ருதம் ஜயே த்யுக்திபரைஸ் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ॥

உறுமலுடன் கூடிய எவரது ஜயகோஷத்தை ஜநலோகத்தில் இருந்த ஸநந்தநாதியர் பல்லாண்டு பாடிய வண்ணமே கேட்டு மகிழ்ந்தனரோ அந்த ஹரி எனக்கு மங்களங்களைப் பெருக்கி அருள் செய்யவேண்டும். (18)

एकार्णवाद्यस्य महीयसो महीम् आदाय वेगेन खमुत्पतिष्यतः ।
नतं वपुर्योगिवरैः स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஏகார்ணவாத் யஸ்ய மஹீயஸோ மஹீம்
ஆதாய வேகேந கமுத்பதிஷ்யத: ।
நதம் வபுர் யோகிவரைஸ் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

மிகப்பெரிய நீர்ப்பரப்பிலிருந்து நிலமகளைப் பெயர்த்தெடுத்து விரைவாக மேலே பாய்ந்து வந்த எந்தக் கோலவராஹமூர்த்தியை ஸநகாதியோகியர் கண்டு வணங்கினரோ அந்த ஹரி எனக்கு மங்களங்களைப் பெருக்குவராக. (19)

हतो हिरण्याक्ष-महासुरः पुरा पुराणपुंसा परमेण येन ।
वराहरूपः स पतिः प्रजापतिः ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஹதோ ஹிரண்யாக்ஷ-மஹாஸுர: புரா
புராணபும்ஸா பரமேண யேந ।
வராஹரூபஸ் ஸ பதி: ப்ரஜாபதி:
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

மிகச்சிறந்த புராண புருஷரான யாரால் ஹிரண்யாக்ஷனென்ற அஸுரன் அழிக்கப்பட்டானோ, அந்த ஞானப்பிரான் எனக்கு மங்களங்கள் பெருக அருள் செய்ய வேண்டும். (20)



## நரஸிம்ஹாவதாரம்

दंष्ट्राकरालं सुरभीतिनाशकं कृतं वपुर्दिव्य-नृसिंहरूपिणा ।
त्रातुं जगद्येन स सर्वदा प्रभुः ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

தம்ஷ்ட்ரா-கராளம் ஸுரபீதிநாசகம்
க்ருதம் வபுர் திவ்ய-ந்ருஸிம்ஹ-ரூபிணா ।
த்ராதும் ஜகத் யேந ஸ ஸர்வதா ப்ரபு:
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

தேவர்களின் பயத்தை அகற்றவல்லதும் கோரைப்பற்களால் அச்சுறுத்துவதுமான நரங்கலந்த சிங்க உருவை உலகைக் காக்க வென்றே யார் தரித்தாரோ அந்த ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள் செய்ய வேண்டும். (21)

दैत्येन्द्र- वक्षःस्थल-दारदारुणैः करेरुहैर्यः क्रकचानुकारिभिः ।
चिच्छेद लोकस्य भयानि सोऽच्युतो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

தைத்யேந்த்ர-வக்ஷஸ்ஸ்தல-தார-தாருணை:
கரேருஹைர் ய: க்ரகசாநுகாரிபி: ।
சிச்சேத லோகஸ்ய பயாநி ஸோऽச்யுதோ
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ॥

அவுணன் மார்பைக் கிழிக்கவல்லதும் ரம்பம் போன்றதுமான நகங்களால் உலகின் பயத்தைப் போக்கிய ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருளவேண்டும். (22)

दन्तान्त-दीप्तद्युति-निर्मलानि यः चकार सर्वाणि दिशां मुखानि ।
निनाद वित्रासित-दानवो ह्यसौ ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

தந்தாந்த-தீப்தத்யுதி-நிர்மலாநி ய:
சகார ஸர்வாணி திச’ாம் முகாநி |
நிநாத-வித்ராஸித-தாநவோ ஹ்யஸௌ
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ||

பற்களின் காந்தியால் திசை முடிவிலும் ஒளி பரப்புகிறவரும் ஸிம்ஹநாதத்தால் அஸுரர்களை நடுக்கமுறச் செய்பவருமான ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருளவேண்டும். (23)

यन्नामसंकीर्तनतो महाभयात् विमोक्षमाप्नोति नसंशयं नरः ।
स सर्वलोकार्तिहरो नृकेसरी ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

யந்நாம-ஸங்கீர்த்தநதோ மஹாபயாத்
விமோக்ஷ-மாப்நோதி ந ஸம்சயம் நர: |
ஸ ஸர்வ-லோகார்த்தி-ஹரோ ந்ருகேஸரீ
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ||

தன் நாமத்தைச் சொல்பவனது பெரும் பயத்தைப் போக்கி ...ள்பவரும் உலகனைத்தின் துயரைத் துடைப்பவருமான சிங்கப் பிரான் எனக்கு மங்களங்களைப் பெருக்குவாராக. (24)

सटा-कराल-भ्रमणानिलाहताः स्फुटन्ति यस्याम्बुधराः समन्ततः ।
स दिव्यसिंहः स्फुरितानलेक्षणो ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

ஸடா-கராள-ப்ரமணாநிலாஹதா:
ஸ்புடந்தி யஸ்யாம்புதராஸ் ஸமந்தத: |
ஸ திவ்யஸிம்ஹ: ஸ்புரிதா-நலேக்ஷணோ
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ||

அசையும் பிடரிமயிர்களால் மேகக் கூட்டங்களை நாற்புறமும் சிதறிவிழும்படி செய்பவரும் ஜ்வலிக்கும் கனல் போன்ற கண்களை யுடையவருமான சிங்கப்பிரான் எனக்கு மங்களம் பெருக அருள்வா ராக. (25)

यदीक्षण-ज्योतिषि रश्मिमण्डलं प्रलीन-मीषन्न रराज भास्वतः ।
कुतः शशाङ्कस्य स दिव्यरूप-धृक् ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

யதீக்ஷண-ஜ்யோதிஷி ரச்'மி-மண்டலம்
ப்ரலீந-மீஷந் ந ரராஜ பாஸ்வத: ।
குத: ச'ச'ாங்கஸ்ய ஸ திவ்யரூப-த்ருக்
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ॥

பகலவனது கதிர்க்கூட்டங்கள் எவரது கண்ணொளியில் மங்கிப் போகிறதோ, சந்திரனைப்பற்றிப் பேசவே வேண்டியதில்லையோ, அந்த அழகிய சிங்க உருவம் தரித்த ஹரி எனக்கு மங்களங்களைப் பெருக்குவாராக. (26)

अशेष-देवेश-नरेश्वरेश्वरैः सदा स्तुतं यच्चरितं महाद्भुतम् ।
स सर्वलोकार्तिहरो महाहरिः ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

அசே'ஷ-தேவேச'-நரேச்'வரேச்'வரை:
ஸதா ஸ்துதம் யச்சரிதம் மஹாத்புதம் ।
ஸ ஸர்வ-லோகார்த்தி-ஹரோ மஹாஹரி:
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ॥

எந்த சிங்கபிரானது மிக அத்புத சரிதையை ப்ரபுக்களும் மேலாத் தேவரும் நிலத்தேவரும் புகழ்ந்தவண்ண மிருக்கிறார்களோ உலகனைத்தின் துயரையும் பாபங்களையும் போக்கவல்ல அந்த ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள்வாராக. (27)

द्रवन्ति दैत्याः प्रणमन्ति देवताः नश्यन्ति रक्षांसि अपयान्ति चारयः ।
यत्कीर्तनात् सोऽद्भुतरूप-केसरी ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா:
நச்'யந்தி ரக்ஷாம்ஸி அபயாந்தி சாரய: |
யத்கீர்த்தநாத் ஸோsத்புத-ரூபகேஸரீ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

*எவருடைய திருநாமத்தைச் சொன்ன மாத்திரத்தாலேயே அஸுரர்கள் ஓடுகின்றனரோ, தேவர்கள் வணங்குகின்றனரோ, அரக்கர்கள் அழிந்து போவார்களோ, எதிரிகள் திரும்பி ஓடுவார்களோ, அந்த அழகியசிங்கர் எனக்கு மங்களங்களைப் பெருக்குவாராக.* (28)



வாமனவதாரம்

ऋक्पावितं यो यजुषा हि श्रीमत् सामध्वनि-ध्वस्त-समस्त-पातकम् ।
चक्रे जगद्वामनकः स सर्वदा ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

ருக்பாவிதம் யோ யஜுஷா ஹி ஸ்ரீமத்
ஸாமத்வநி-த்வஸ்த-ஸமஸ்த-பாதகம் |
சக்ரே ஜகத் வாமநகஸ் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ||

ருக்வேதத்தை உச்சரித்து உலகைத் தூயதாக்கியும், யஜுர் வேதத்தால் நிறம்பெறச்செய்தும் ஸாம கானத்தால் ஸமஸ்த பாதகத்தையும் அழித்துமுள்ள திருக்குறள் உருவனான மாயன் எனக்கு மங்களங்களைப் பெருக்குவாராக. (29)

यत्पाद-विन्यास-पवित्रतां मही ययौ वियच्चर्ग्यजुषामुदीरणात् ।
स वामनो वामशरीररूपधृङ् ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

யத்பாத-விந்யாஸ-பவித்ரதாம் மஹீ
யயௌ வியச்சர்க்-யஜுஷா-முதீரணாத் ।
ஸ வாமநோ வாமச'ரீர-ரூபத்ருக்
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ॥

எவருடைய திருவடிபடுதலால் நிலப்பரப்பும், ருக் யஜுஸ் முதலிய வேதங்களைச் சொல்வதால் வானமும் புனிதமாயினவோ அந்த வாமனமூர்த்தி எனக்கு மங்களங்களைப் பெருக்குவாராக. (30)

यस्मिन् प्रयातेऽसुरभूभृतोऽध्वरात् ननाम खेदा-दवनिः ससागरा ।
स वामनः सर्वजगन्मयः सदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

யஸ்மிந் ப்ரயாதே஽ஸுர-பூப்ருதோ஽த்வராத்
நநாம கேதாத் அவநிஸ் ஸஸாகரா ।
ஸ வாமநஸ் ஸர்வ-ஜகந்மயஸ் ஸதா
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ॥

அஸுர மன்னன் மஹாபலியின் அரண்மனையை நோக்கி எவர் போனபோது கடல் சூழ்ந்த நிலமங்கை வருந்தித்தலைகுனிந்தாளோ உலகனைத்தையும் தன்னுள் ஒடுக்கிய அந்தத் திருக்குறளப்பன் எனக்கு மங்களங்கள் பெருக அருள்வாராக. (31)

महाद्भुते दैत्यपतेर्महाध्वरे यस्मिन् प्रविष्टे क्षुभितं महासुरैः ।
स वामनोऽन्तःस्थितसप्तलोकधृङ् ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

மஹாத்புதே தைத்யபதேர் மஹாத்வரே
யஸ்மிந் ப்ரவிஷ்டே க்ஷுபிதம் மஹாஸுரை: |
ஸ வாமநோऽநந்தஸ் ஸ்தித ஸப்தலோகத்ருக்
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

*மிக ஆச்சர்யமான அஸுர மன்னனது யாகசாலையில் எவர் ப்ரவேசித்ததும் அஸுரரனைவரும் குழப்பமடைந்து போயினரோ, ஸப்தலோகத்தையும் தன் வயிற்றில் வைத்துக்கொண்ட அந்த ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள்வாராக.* (32)

सङ्घैः सुराणां दिवि भूतलस्थितैः तथा मनुष्यैर्गगने च खेचरैः ।
स्तुतः क्रमाद्यः प्रचचार सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஸங்கைஸ் ஸுராணாம் திவி பூதலஸ்திதை:
ததா மநுஷ்யைர் ககநே ச கேசரை: |
ஸ்துத: க்ரமாத் ய: ப்ரசசார ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

*ஸ்வர்க்கத்தில் தேவர்களாலும், தரையில் மனிதர்களாலும், வானில் வானவர்களாலும் முறையுடன் துதிக்கப்பட்டவாறு உலா வந்த ஹரி எனக்கு மங்கள வ்ருத்தியை செய்தருளவேணும்.* (33)

क्रान्त्वा धरित्रीं गगनं तथा दिवं मरुत्पतेर्यः प्रददौ त्रिविष्टपम् ।
स देवदेवो भुवनेश्वरेश्वरो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

க்ராந்த்வா தரித்ரீம் ககநம் ததா திவம்
மருத்பதேர் ய: ப்ரததௌ த்ரிவிஷ்டபம் |
ஸ தேவதேவோ புவநேச்'வரேச்'வரோ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ||

நிலத்தையும் வானத்தையும் ஸ்வர்க்க உலகையும் அளந்து கொண்டு இந்த்ரனுக்கு மூவுலகையும் அளித்த ஜகந்நாதனை ஹரி எனக்கு மங்களங்களைப் பெருக்கியருளவேணும். (34)

अनुग्रहं चापि बलेरनुत्तमं चकार यश्चेन्द्रपदोपमं क्षणात् ।
सुरांश्च यज्ञांशभुजः स सर्वदा ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

அநுக்ரஹம் சாபி பலே-ரநுத்தமம்
சகார யச்சேந்த்ர-பதோபமம் க்ஷணாத் ।
ஸுராம்ச்'ச யஜ்ஞாம்ச'புஜஸ் ஸ ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

மஹாபலிக்கு இந்திர பதவியை யொத்த உயர் பதவியையும் யாகத்தின் ஹவிர்ப்பாகத்தைத் தேவர்களுக்கும் விரைவில் அளித்த ஹரி எனக்கு மங்களங்களே பெருக அருள்பாலிப்பாராக. (35)



## மத்ஸ்யாவதாரம்

रसातलाद्येन पुरा समाहृताः समस्तवेदा जलचाररूपिणा ।
स कैटभारिर्मधुहाम्बुशायी ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ரஸாதலாத் யேந புரா ஸமாஹ்ருதா:
ஸமஸ்தவேதா ஜலசாரரூபிணா ।
ஸ கைடபாரிர் மதுஹாம்புச'ாயீ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

மீனுகி, மதுகைடபர்களை அழித்து, பாதாளத்திலிருந்து வேதங்களை மீட்டுக் கொணர்ந்த க்ஷீராப்திநாதனை ஹரி என் மங்களங்களைப் பெருக்குவாராக. (36)



பரசுராமாவதாரம்

निःक्षत्रियां यश्च चकार मेदिनीम् अनेकशो बाहुवनं तथाऽच्छिनत् ।
यः कार्तवीर्यस्य स भार्गवोत्तमो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

நி:க்ஷத்ரியாம் யச்'ச சகார மேதிநீம்
அநேகசே'ா பாஹுவநம் ததாச்சிநத் ।
ய:கார்த்தவீர்யஸ்ய ஸ பார்கவோத்தமோ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

*கார்த்தவீர்யார்ஜுனனது ஆயிரம் தோள்களைத் துணித்து, பலகால் அரசர்களையழித்த பரசுராமராகிய ஹரி எனக்கு மங்களங்களைப் பெருக்க வேணும்.* (37)



ராமாவதாரம்

निहत्य यो वालिन-मुग्रविक्रमं
निबद्ध्य सेतुं जलधौ दशाननम् ।
जघान चान्यान् रजनीचरानसौ
ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

**நிஹத்ய யோ வாலிந-முக்ர-விக்ரமம்**
**நிபத்ய ஸேதும் ஜலதௌ தச'ாநநம் ।**
**ஜகாந சாந்யாந் ரஜநீசராநஸௌ**
**மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥**

கொடிய வலிமையுள்ள வாலியைக் கொன்று, மாகடலில் அணையைக் கட்டி தசமுகனையும் மற்றுமுள்ள அரக்கர்களையும் அழித்த ஹரி எனக்கு மங்களங்களைப் பெருக்குவாராக. (38)



## கிருஷ்ணாவதாரம்

**चिक्षेप बालः शकटं बभञ्ज यो यमार्जुनं कंसमरिं जघान च ।**
**ममर्द चाणूरमुखान् स सर्वदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥**

**சிக்ஷேப பாலஃ ச'கடம் பபஞ்ஜ யோ**
**யமார்ஜுநம் கம்ஸமரிம் ஜகாந ச ।**
**மமர்த சாணூரமுகாந் ஸ ஸர்வதா**
**மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரிஃ ॥**

பால கிருஷ்ணனாய்ச் சகடெறிந்தும், மருதமரங்களை முறித்தும் சாணூராதியரையும், பகைமைகொண்ட கம்சனையும் அழித்தும் உகந்த ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள்பாலிப்பாராக. (39)

प्रातः सहस्रांशु-मरीचिनिर्मलं करेण बिभ्रद्भगवान् सुदर्शनम् ।
कौमोदकीं चापि गदामनन्तो ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ப்ராதஸ் ஸஹஸ்ராம்சு' மரீசி-நிர்மலம்
கரேண பிப்ரத்-பகவாந் ஸுதர்ச'நம் ।
கௌமோதகீம் சாபி கதா-மநந்தோ
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரிः ॥

*காலையில் ஆயிரம் கதிரவனது கதிர்க்கூட்டத்தைப் போன்ற பேரொளியுள்ள சக்கரத்தையும் கௌமோதகி எனும் கதையையும் ஏந்திய பகவானை ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள்பாலிப் பாராக.* (40)

हिमेन्दु-कुन्दस्फटिकाभ-निर्मलं मुखानिलापूरित-मीश्वरेश्वरः ।
मध्याह्नकालेपि स शंखमुद्वहन् ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः ॥

ஹிமேந்து-குந்த-ஸ்படிகாப-நிர்மலம்
முகாநிலாபூரிதம் ஈச்'வரேச்'வரः ।
மத்யாஹ்நகாலேऽபி ஸ ச'ங்கமுத்வஹந்
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி: ॥

*பனிநீர், சந்த்ர மண்டலம், குந்தப்பூ, ஸ்படிகமணி இவை போன்று வெண்ணிறமாயும், திருமுகத்தால் காற்று நிரப்பப்படுவதாயும் உள்ள ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை நடுப்பகலில் ஏந்தியருளும் ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள் செய்வாராக.* (41)

तथाऽपराह्णे प्रविकासि पङ्कजं वक्षःस्थलेन श्रियमुद्वहन् हरिः ।
विस्तारि-पद्मायत-पत्रलोचनो ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

ததாऽபராஹ்ணே ப்ரவிகாஸி பங்கஜம்
வக்ஷஸ்ஸ்தலேந ச்'ரியமுத்வஹந் ஹரி: ।
விஸ்தாரி-பத்மாயத-பத்ரலோசநோ
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ॥

மலர்ந்த தாமரையைக் கையிலும் திருமகளைத் திருமார்பிலும் மாலையில் ஏந்தியருளும் மலர்ந்த தாமரையிதழையொத்த கண்ணி னரான ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அருள் செய்வாராக. (42)

सर्वेषु कालेषु समस्तदेशेषु अशेषकार्येषु तथेश्वरेश्वरः ।
सर्वैः स्वरूपैर्भगवा-ननादिमान् ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

ஸர்வேஷு காலேஷு ஸமஸ்ததேசே'ஷு
அசே'ஷகார்யேஷு ததேச்'வரேச்'வர: |
ஸர்வைஸ் ஸ்வரூபைர் பகவாநநாதிமாந்
மமாஸ்து மாங்கள்ய-விவ்ருத்தயே ஹரி: ||

எல்லாக் காலத்திலும், எல்லா இடங்களிலும், எல்லாத் தொழில்களிலும், எல்லாவித உருவங்களுடன் தோன்றியருளும் ஆதியந்தமற்ற பகவானான ஹரி எனக்கு மங்களங்கள் பெருக அநுக் ரஹம் செய்வாராக. (43)

## பலச்'ருதி

एतत्पठन् दाल्भ्य समस्तपापैः विमुच्यते विष्णुपरो मनुष्यः ।
सिद्ध्यन्ति कार्याणि तथास्य सर्वान् अर्था-नवाप्नोति यथेच्छते तान् ॥

ஏதத் படந் தால்ப்ய ஸமஸ்தபாபை:
விமுச்யதே விஷ்ணுபரோ மநுஷ்ய: |
ஸித்த்யந்தி கார்யாணி ததாஸ்ய ஸர்வாந்
அர்த்தா-நவாப்நோதி யதேச்சதே தாந் ||

தால்ப்ய முனிவரே, விஷ்ணுவே பரதேவதையெனும் உண்மை உணர்ந்த மனிதன் இத்துதி நூலைப் பாராயணம் செய்து எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். அவனுடைய காரியங்கள் யாவும் நற்பயனை அளிக்கின்றன. விரும்பிய எல்லாப் பொருளும் அவனுக் குக் கைகூடுகின்றன. (44)

दुःस्वप्नः प्रशममुपैति पठ्यमाने स्तोत्रेऽस्मिन् श्रवणविधौ सदोद्यतस्य ।
आरम्भो द्रुतमुपयाति सिद्धिमीशः पापानि क्षपयति चास्य देवदेवः ॥

துஸ்ஸ்வப்நः ப்ரச'ம-முபைதி பட்யமாநே
ஸ்தோத்ரேஸ்மிந் ச்'ரவணவிதௌ ஸதோத்யதஸ்ய|
ப்ராரம்போ த்ருதமுபயாதி ஸித்திமீச':
பாபாநி க்ஷபயதி சாஸ்ய தேவதேவ: ||

இத்துதியை எப்பொழுதும் படிப்பதைக் கேட்பதென்னும் விரதம் பூண்டவனது கெட்ட கனவுகள் அடங்கிப் பயனற்றுப் போகும், துவங்கிய தொழில்கள் விரைவில் நற்பயனளிக்கும்படி நிறைவேறும். தேவதேவனாகிய இறைவன் பாவங்களையெல்லாம் போக்கிவிடுகிறான். (45)

माङ्गल्यं परमपदं सदार्थसिद्धिं निर्विघ्ना-मधिकफलां श्रियं ददाति ।
किं लोके तदिह परत्र चापि पुंसां यद्विष्णुप्रवणधियां न दाल्भ्य
साध्यम् ॥

மாங்கள்யம் பரமபதம் ஸதார்த்த-ஸித்திம்
நிர்விக்நா-மதிகபலாம் ச்'ரியம் ததாதி |
கிம் லோகே ததிஹ பரத்ர சாபி பும்ஸாம்
யத் விஷ்ணு-ப்ரவணதியாம் ந தால்ப்ய ஸாத்யம் ||

மங்களத்தையும், நலமந்தமில்லதோர் நாட்டையும், விரும்பியது நன்கு விரைவில் கைகூடுவதையும், தடையற்ற பெருஞ்செல்வத்தையும் இறைவன் அருள்வான். தால்ப்ய முனிவரே, இம்மையிலும் மறுமையிலும் திருமாலடியார்க்குக் கிட்டாதது யாதுமில்லை. (46)

देवेन्द्रस्त्रिभुवन-मर्थमेकपिंगः संसिद्धिं त्रिभुवनगां च कार्तवीर्यः ।
वैदेहः परमपदं प्रसाद्य विष्णुं सम्प्राप्तः सकलफलप्रदो हि विष्णुः ॥

**தேவேந்த்ரஸ் த்ரிபுவந-மர்த்த-மேகபிங்க:**
**ஸம்ஸித்திம் த்ரிபுவநகாம் ச கார்த்தவீர்ய: |**
**வைதேஹ: பரமபதம் ப்ரஸாத்ய விஷ்ணும்**
**ஸம்ப்ராப்தஸ் ஸகல-பலப்ரதோ ஹி விஷ்ணு: ||**

கார்த்தவீர்யார்ஜுனன் மூவுலகிலும் அதர்மத்தைத் தடுக்க வல்ல தர்மசக்தியையும், குபேரன் பணத்தின் அதிபனுகும் பதவியையும், இந்த்ரன் மூவுலகில் உள்ள இன்பத்தையும், விதேஹ மன்னன் பரமபதத்தையும் திருமாலைப் பூசித்தே பெற்றனர். எல்லா பலனையுமளிக்கவல்லவர் திருமால்தானே. (47)

**सर्वारम्भेषु दाल्भ्यैतद् दुःस्वप्नेषु च पण्डित: ।**
**जपे-देकमना विष्णौ तथाऽमङ्गल्य-दर्शने ॥**

**ஸர்வாரம்பேஷு தால்ப்யைதத் துஸ்ஸ்வப்நேஷு ச பண்டித: |**
**ஜபே-தேகமநா விஷ்ணௌ ததாऽமங்கள்ய-தர்ச'நே ||**

தால்ப்யரே, அறிவுள்ளவன் எல்லாக் கார்யங்களை ஆரம்பிக்கும்போதும், கெட்ட கனவுகள் தோன்றும்போதும், அமங்களங்கள் நேரும்போதும், இறைவனை திருமாலிடம் மாருத பக்தியுடன் இத்துதியை ஜபம் செய்யவேண்டும். (48)

**शमं प्रयान्ति दुष्टानि ग्रहपीडाश्च दारुणा: ।**
**कर्मारम्भाश्च सिद्ध्यन्ति पुण्यमाप्नोति चोत्तमम् ॥**

**ச'மம் ப்ரயாந்தி துஷ்டாநி க்ரஹபீடாச்'ச தாருணா: |**
**கர்மாரம்பாச்'ச ஸித்த்யந்தி புண்யமாப்நோதி சோத்தமம் ||**

அவனது தீமைகள் யாவும் அழிந்து போகின்றன. கொடிய கிரகங்களின் தீய பலன்களும் மாறுகின்றன. தொழில்களும் நற்பயனளிக்கின்றன. தீய கனவும் பயனற்றதாகிறது. நல்வினையின் உயர்ந்த பயனையும் பெறுகிறான். (49)

